உ

சிவமயம்.

ஏனங்குடியென்கிற

# வடாரண்ய மான்மியம்.

இஃது

ஏனங்குடி லோயர் செகண்டரிஸ்கூல்

தலைமை உபாத்தியாயர்

எஸ்இராமசுவாமி ஐயரவர்களால்

மொழிபெயர்க்கப்பட்டு,

மேற்படியூர்

மாா ஸ்ரீ.

வெ. ராமசந்திரநாயுடு, நா. ஸ்ரீநிவாசநாயுடு, சு- ராமையநாயுடு.

இவர்களால்

நடுக்காவேரி.

ஸ்ரீஜகத்குரு யந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1898.



உ

சிவமயம்.

# வடாரணிய மான்மியம்.

## முதல் அத்தியாயம்.

ஸ்ரீ முகுளாம்பாள் சமேத வடாரணியேசுவரர் மங்களந் தந்தருள்வாராக.

பூர்வம் நைமிசாரணியத்தில் உத்தமமான சித்தத்தையுடைய சௌனகாதி மஹாரிஷிகள் பரமசிவ பக்தியோடு "துவாதசாப்த" மென்ற ஓர் வேள்வி புரிந்தார்கள். அப்பொழுது தர்மசொரூபரான சூத புராணிகர் அவ்விடத்துக்கு வந்தார். விபூதி ருத்திராக்ஷதாரணராய், சிவக்ஷேத்திர மகிமையெல்லாமுணர்ந்த புண்ணியாத்துமாக்களுக்குள் சிறந்தவராய், சிவபக்

தர்களில் மேம்பட்டவராய், சிவதத்துவ விசாரம் புரிந்து தெளிந்தவராய், அன்பினோடும் சிவநாமஸ்மரணைபுரிபவராய், ஸர்வசாஸ்திரார்த்தங்களையுமாராய்ந்து தெரிந்தவராய், மந்திரம், யாகமிவற்றுண்மைப் பொருளுணர்ந்தவராய், புண்ணிய க்ஷேத்திர தீர்த்தங்களின் மகிமையறிந்தவராய்ச் சிறந்து விளங்காநின்ற இந்த ஸூதமுனி புங்கவரைச் சௌனகாதி முனிவர்களெதிர்கொண்டழைத்துவந்து, சிறந்த ஆசனத்திலிருத்தி அர்க்கிய பாத்தியாதிகளாலே யுபசரித்து, அவரை நோக்கிக் கூறுகின்றார்கள். சகலகலைகளுமுணர்ந்து தெளிந்த புண்ணிய மூர்த்தியே, நதி, மலை, வனங்களின் விசேஷமறிந்த பெரியோனே, பாக்கியவந்தரே, எங்களுக்குச் சிவதத்துவத்தை நன்கு கூறியருளவேண்டும். ஈசுவர தரிசன காலத்தும், விவாஹாதி காலத்திலும், மற்றுமுள்ள சுபகாலங்களிலும், மலைமகள் காதலனான ஸ்ரீ பரமேசுவரனுடைய திருநாமங்களையுச்சரித்துத் துதித்தால் அந்தக் காரியங்களிடையூறின்றி

௭/1



நிறைவேறும். அப்படியே நினைப்பவர்கள் கிருதார்த்தராவார்கள். இதிலே சந்தேகமில்லை. கிராமத்திலாவது, கிருகத்திலாவது தேவதேவனான மஹாதேவனது சரித்திரங் கேளாதவர்கள் கொடிய நரகத்தில் வேதனைப்படுவார்கள்- அந்த வீடு பாழாம். அந்தக் கிராமங்காடாகும். சிவகதை கேட்போர் சிவனேயாவார்கள் ஆகையால் சகலமுந்தெரிந்த தேவரீர் எங்களுக்குப் பரமசிவவைபவத்தைச் சொல்லிப் பரிசுத்தராக்கவேண்டும் என்று பிரார்த்தித்தார்கள்.

இது கேட்ட ஸூதமுனிவர் சரீரம் பூரித்து, அந்தச் சௌனகாதி மஹாரிஷிகளுக்கு மத்தியிலெழுந்து நின்று சொல்லுகின்றார். இவ்வுலகத்தில் நீங்களே தன்னியர்கள். சிவ சொரூபிகள், சாரம் அறிந்தவர்கள் இப்படிப்பட்டவுங்களுக்கு உபதேசிப்பதினால் நானும் பாக்கியவானாவேன்- ஒரு நிமிஷமாவது, அரை நிமிஷமாவது சிவகதையல்லது சிவக்ஷேத்திரமகிமை கேட்

பேரும் படிப்போரும் சிவசாயுஜ்யம் பெறுவர்கள். இது சத்தியம், சத்தியம்; ஆகையால் உங்களுக்குச்சிவ மகிமையைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

புண்ணிய தீர்த்தமாகிய காவேரிநதிக்குத் தெட்சணபாகத்தில், ஸ்ரீவாஞ்சிய மென்னப்பட்ட புண்ணிய க்ஷேத்திரத்துக்குக் கிழக்கே, திருக்கண்ணபுரத்துக்கு வாயுதிசையில், திருவாலங்காடு என்ற புண்ணிய பூமி யொன்றுண்டு. இது ஆதி தொடங்கிப் பேர்பெற்ற தாய், புண்ணியஸ்தலங் களெல்லாவற்றினு முத்தமமா னதாய், பாபமென்கிற வனத்துக்கு அக்கினி போன்று விளங்குகின்றது. அங்கேயொரு சிவதீர்த்தமுண்டு அதற்குப் புத்திரகாம தீர்த்தமென்றுபேர். அதில் ஸ்நானம் செய்தபேர்கள் இச்சித்தபடியுத்தம சற்புத்திரர் களைப் பெற்று வாழ்வார்கள். இந்த ஸ்தலம் கயையை விடக் கோடிபங்கு அதிகமான பலனைக்கொடுக்கத்தக் கது. இந்த க்ஷேத்திரத்துக்குச் சமானமானது பூமியி

விருந்ததுமில்லை; இனி யிருக்கப்போகிறதுமில்லை. இந்த க்ஷேத்திரத்தைத் தரிசனஞ்செய்தவர்களுக்குக் கோடி கோதான பலன்கிடைக்கும். இந்தவனத்தில், அசோகு, புன்னை, எலுமிச்சை, ஸாலம், நாவல், புளி முதலிய விருட்சங்களும், ஜாதி, தாமரை, மல்லிகை, முதலிய புஷ்பங்களும் புஷ்பித்துப் பிரகாசமாய்விளங்குகிறது. தேவர்கள், யட்சர்கள், கந்தருவர், சித்தர்களும், பிரும்மா, விஷ்ணு, சூரியன், சந்திரன், வாயு முதலிய பலராலும் பூஜிக்கப்பட்டுள்ளது. அதிக சீக்கிரத்தில் தபசித்திகொடுக்கத்தக்கது. வடாரணிய க்ஷேத்திரத்தையுத்தேசித்து நடப்பவன் எத்தனையடிவைக்கிறானோ அவ்வளவாயிர வருஷகாலம் சிவலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். தர்ம்மராஜாவானவர் எமபடர்களை நோக்கி, அசதிமறதியாய்க்கூடத் திருவாலங்காட்டுக்குச் சமீபத்திற்கு போகாதீர்கள்- அங்கே வசிக்கிற பிராமணர் முதலானயாவரும் சிவபகதர்களாயும், சிவ சொரூபர்களாயு மிருக்கின்றார்கள்.

நீங்களங்கே போனால் அவமானங்கிடைக்குமென்று உத்தரவு கொடுக்கிறார். ஆகையினாலிந்த க்ஷேத்திரம் மஹோத்தமமானது. இதைக்கண்டாலும் மறுஜனனம் வாராது. விருச்சிக ராசியில் சூரியன் இருக்கும்போது இஷ்ட பந்துக்களோடு வடாரணியத்துக்குவந்து, புத்திரகாமதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, சிவபெருமானை வில்வாதி பத்திர புஷ்பங்களால் அர்ச்சனை புரிந்து, தேங்காயுடைத்து, மாவிளக்கேற்றி, வடவிருக்ஷத்தையும்பூஜித்து, ஸோமவாரத்திரவில் நித்திரையொழிந்து ஆராதித்து, மறுநாட்காலையிலெழுந்திருந்து ஸ்நானஞ் செய்து, பன்னிரு பிராமணர்களுக்கு அறு சுவையோடு போஜனஞ்செய்து வைத்தவர்களுக்குச் சகல காரியங்களு மெளிதில் கைகூடும். மஹா பாதகங்களும் விலகும். இந்தக் கலியுகத்தில் யாருக்குச் சிவபக்தி யுண்டாகிறதோ அவர்கள் சக்கிரவர்த்தியாகிறார்கள். சனி வாரத்தில் ஆலவிருட்சத்துக்குப் பாலபிஷேகஞ்

செய்து, அர்ச்சனை பண்ணி மாம்பழதானஞ்செய்தால் அந்த ஸ்திரீ வெகுகாலந் தன் பதியோடு கூடிச் சுகமாய் வாழ்ந்திருப்பாள்.

இந்த ஸ்தலத்தில் வராகமூர்த்தியாகியதிருமால் வடாரணியேசுவரரைப் பூஜித்துப் பிரமனுக்கு மேலான பதவியை யடைந்தார். முன்னே கிருஷ்ணபகவான் கைலாசத் துக்குப்போய்ச் சிவபெருமானைப் பூஜித்துப் பணிந்தார். கயிலாஸ நாதனான மலைமகள் மணாளன் கிருஷ்ண மூர்த்தியை நோக்கித் தெட்சண திசையில் விளங்காநிற்கும் புத்திரகாம க்ஷேத்திரத்திற் சென்று என்னையாராதித்தால் உனக்கிஷ்டமான புத்திரபாக்கிய முண்டாகுமென்றருளிச் செய்தார். அப்படியே கிருஷ்ணபகவானானவர் இந்த க்ஷேத்திரத்தில் வடேசுவரரை யாராதித்துப் பிரத்தியும்நனைப் பெற்று மகிழ்ச்சியடைந்தார். ஆதலாலிதற்குக் கேட்டது தரும், பூகைலாஸம் என்று பெயராயிற்று.

இது ஸ்காந்தமஹாபுராணத்தில் புண்ணியக்ஷேத்திர விவரணகாண்டத்தில் மேல்பாகத்தில் சொல்லப்பட்ட வடாரணிய க்ஷேத்திர மான்மியத்தில் முதலாவதத்தியாயம் முற்றுப் பெற்றது.

—(*)—

## இரண்டாவது அத்தியாயம்.

—*:0:*—

இப்படிச் சொன்ன ஸூதபுராணிகரைச் சௌநகாதி முனிவர்கள் பார்த்து, மெய்யறிவமைந்த முனிவரே! வியாஸமஹாரிஷியின் மாணக்கரே! கிருஷ்ணபகவான் எதற்காகக் கைலாசம் போனார்? எந்தக் காரணத்தால் வடாரணியத்துக்கு வந்தார்? எவ்வகையான தவம் செய்து புத்திரப்பேறு பெற்றார்? அவருடைய பத்தினிமார் பலருள் யாரிடத்திலந்தப் புத்திரனுற்பத்தியானான்? கர்ணாமிருதமான இந்தச் சரித்தி

ரந்தையெங்களுக்கு விஸ்தாரமாகச் சொல்ல வேண்டு மென்று கேட்கச் சூதமுனிவர் சொல்லுகின்றார்.

கேளும் முனி சிரேஷ்டரே! கிருஷ்ணனுடைய சரித்திரஞ் சொல்லுகிறேன். நினைத்தமாத்திரத்தில் சர்வாபீஷ்டமுமளித்தருளும் பரபிரமசொரூபியாயுள்ள அந்தப் பிரபுவானவர், தேவர்கள், கசியபர் முதலியோர் பிரார்த்தனைக்கிரங்கிப் பாண்டவர் சகாயனாகத் தேவகிகர்ப்பத்தில் அவதரித்தார். அவரது தந்தையாகிய வசுதேவர் கிருஷ்ணனையெடுத்துக் கொண்டுவந்து, கோகுலத்தில் நந்தகோபனுடைய கிருஹத்திலே விட்டு விட்டு, நந்த கோபன்கிருஹத்தில் ஜனித்தமாயையை எடுத்துக் கொண்டுவந்து தேவகியிடத்தில் வைத்தார். கோகுலத்தில் கிருஷ்ணன் நாடோறும் பூர்வபட்சத்துச் சந்திரன் போல வளர்ந்து வந்தார். பகைவனாகிய கம்ஸன் இதைக் கேட்டு அந்தப் பெண்ணைத் தருவித்துக் கொல்ல எத்தனஞ் செய்கையில், அ

ந்தப் பெண் அடே! மூடா! உன்னைக்கொல்லப் பிறந்தவன் வேறோரிடத்தில் வளர்ந்து கொண்டிருக்கிறான். ஏன்? என்னைக்கொல்லப் பார்க்கிறாயென்று சொல்லி அந்த க்ஷணத்திலே தானேமறைந்து போய் விட்டாள். அது கேட்ட கம்ஸன் நடுங்கித், தன்னிருப்பிடம்போய், வசுதேவர், தேவகியிருவர் விலங்கையுந் தறித்துவிட்டு, அவர்கள் பாதத்திலே பணிந்து தன் ஆண்மனை சென்றான். பிறகு கிருஷ்ணனைவதை செய்ய உத்தேசித்துப், பூதனை, திருணாவர்த்தன், சகடாசுரன், முதலான அசுரர்களை யனுப்பினான்- இவர்களும் மற்றுஞ்சில அசுரர்களும் கிருஷ்ணனிடம் போனதேதவிர திரும்பி வரவில்லை. எமபுரம் போய்ச் சேர்ந்தார்கள். கம்ஸன் தன் மந்திரியாகிய அக்ரூரரென்பவரைக்கொண்டு கிருஷ்ண ஸ்வாமியை வரவழைத்தான். பகவான் வந்து சாணூரன் முதலான அசுரர்களையும், கம்ஸனையும் சங்கரித்துப் பிறகு லோகநாதனை கிருஷ்ண மூர்த்தி உக்கிரசேன மஹாராஜாவுக்கு முடிசூட்டினார்.

பின் ஸாந்திபி கிபஹோரிஷியிடம் போய்ச் சகலகலைகளை யும் அப்பியஸித்தார். அவர் சுவயமே எல்லாமறிந்த வராயிருந்தாலும் சாதாரண மனிதரைப் போலப் பல விநோத விளையாட்டுகள் செய்து வந்தார். மகததே சாதிபதியான ஜராசந்தன் மதுராபட்டணத்தைச் சூழ்ந்து கொண்டதைக் கேட்டுக் காலாக்கிருத்திரன்போ லக்கோபித்து ஜராசந்தனைப் பலதடவைகளில் முறிய டித்துத் துரத்தினர். மறுபடியும் அவன்படை யெடுத்து வந்ததைக் கேட்டு விசுவ கருமாவைபோவித் துவார காபுரியை நிருமித்து, அதிலே வாசஞ்செய்து கொண் டிருந்தார்.

அக்காலத்திலோர் பிராமணன் ஒரு கிருபத்துட ன் குண்டினபுரத்திலிருந்துவந்து, கிருஷ்ணனை நமஸ்கரித் து, அந்த கிருபத்தைக் கொடுத்தார். பீஷ்மபுத்திரியா கிய ருக்குமணியாலெழுதப்பட்ட அந்தப்பத்திரத்தைக் கிருஷ்ண மூர்த்தி வாசித்து, தான் தம்மையே பக்தி

பண்ணிக் கொண்டிருக்கிறேன்; எனது பிராணனுந் தம்முடையதே; தேவரீரது திவ்ய தரிசனம் எப்போது கிடைக்குமென்று தவிக்கிறேன். என்னைத்தம்முடைய தாஸபாவமாகக் கொண்டு நடத்தவேண்டும். ஓ தயா மூர்த்தியே! இதைப் படித்துப் பார்த்துப் பிறகுசெய்யவேண்டிய காரியத்தைச் செய்தருளி, என்பேரில் கிருபை கூர்ந்தருளவேண்டு மென்னும் பொருள் தோன்ற ஸ்ரீ ருக்குமணி தேவியார் திருக்கர மலராலெழுதப்பட்டதையும், வந்த பிராமணோத்தமருடைய வாய் மொழியையுங் கேட்டுப், பின்பு, பிராமணனைப் பூசித்துத் திவ்யபோஜனமளித்து, மிகமகிழ்ச்சிகொண்டு பிராமணனோடு இரதத்திலாரோகணித்துக் கொண்டு, அதி சீக்கிரமாய்க் குண்டின புரஞ்சேர்ந்தார்கள் அந்தண புங்கவன் ருக்குமணியிடம்போய் ஸ்ரீபகவான் வருகையைத் தெரிவித்தார். இதற்குள் ருக்குமணியிந்திராணியையும் பார்வதி தேவியாரையும் பூஜித்து, வாசற்படியில் வந்து ஸ்ரீ கிருஷ்ண தேவர்வருகைக் கே

ர்பார்த்துக் கொண்டிருந்தாள். ருக்குமணி தயாராகித் தனித்து நின்ற அபிப்பிராயந்தெரிந்த ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அவளருகில் தேரைநடத்திக் கையைப்பிடித்து இரதத்திலேற்றிக் கொண்டு வேகமாய்த் திரும்பினர்.

இதைச் சிசுபாலன் சிநேகிதர்களான ஜராசந்தன் முதலானவர்கள் கேட்டுத் தங்களுடைய சைநியங்களைத் திரட்டிக்கொண்டு யுத்தத்திற்கு வந்தார்கள். அப்படி வந்த சைநியங்களெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி முன்னிலைத்து நிற்கமாட்டாமல் சிதறுண்டோடிப் போனார்கள். யாவரும் தெய்வச்செயலாலுயிர் பிழைத்தாற் போதுமென்று ஊர்வந்து சேர்ந்தார்கள். சிசுபாலனுமினிக் கலியாணமென்பதை முழுது மறந்து ஊருக்குப் போய்விட்டான். ருக்குமணி தேவியின் சகோதரனை ருக்குமி யென்பவனும் அவமானப்பட்டுத், தன்னகரம் போக வெட்கப்பட்டுப் போஜகடமென்ற ஓர் பட்டணத்தை நிருமித்து அதிலேயே ஜீவச்சுவம் போலிருந்தான்.

கிருஷ்ண பகவான் துவாரகாபுரி சேர்ந்து,ருக்குமணி யை விதி பூர்வகமாகப் பாணிக்கிரகணஞ் செய்து கொ ண்டு, பிறகு ஜாம்பவதி முதலான பெண்களைமணம்பு ரிந்தருளினர். இந்தப்பிரகாரம் எட்டுஸ்திரிகளைமணம் பு ரிந்தருளினர். இவ்வெண்மரும் அணிமாதி அஷ்டைசு வரியங்களும் எட்டுஸ்திரீகளாக உருமாறி வந்ததுபோ லிருந்தது. தேவலோகத்திலிருந்த பாரிஜாதவிருட்சத் தையுங்கவர்ந்து கொண்டு வந்தார். வேறுபதினாறாயி ரம் பத்தினிமார்களுடனும் கூடிலீலா விநோதமா ய் மகிழ்ந்திருந்தார். ஒருசமயம் இரத்தின கசிதமான மண்டபத்தில்திவ்யசயனத்திலே ருக்குமணிதேவியா ரோடு விளையாடிக் கொண்டிருக் கையில் தேவியார்ப கவானைப்பார்த்து சுவாமீ தேவரீர் திரிலோககர்த்தாவா யும், சர்வசம்பத்துக்களையுந் தருபவராயும், சிருஷ்டிஸ் திதிஸம்ஹாரகாரணராயுமிருக்கின்றீர். நமக்குப்புத்தி ரபாக்கியமில்லையே, புத்திரர்களையடையாதஜன்மம் எ ன்னஜன்மம்? பிள்ளையில்லாதவீடுவீடாகுமா? பட்டுவஸ்

க்ஷீரம், தனம் தானியம், ஆடு, மாடு, கஜ துரகம், ரதம் ராஜ்யமாகிய இவ்வளவும் புத்திரனில்லாவிடிற் பிரயோஜனமென்ன! பிள்ளையில்லாதவர்களுக்கு நல்ல கதி கிடையாதே. யாகமேது? தானமேது? தவமேது? அன்னம் புஜித்தால் அது அன்னமாயில்லை. தாம்பூலம் புஷ்பாதி பரிமளவஸ்துக்களில் உற்சாகமில்லை. புத்திரனிருந்தால் தான் அறம், பொருள், இன்பம், வீடு கிடைக்கும். புத்திரவதியென்றழைக்கப் பெரும் பாக்கியமெனக் கில்லாமற்போயிற்று. நான் எல்லோருககுமேலான பட்டமகிஷியென்ற பெருமை படைத்திருந்தும் பிள்ளையில்லாதிருப்பது பெருங்குறைவாக விருக்கிறது. எப்படியாவது எனக்குப் புத்திரசம்பத் துண்டாகும்படி கருணை புரியவேண்டும். நானும் தம்மோடு சேர்ந்து எவ்வித கஷ்டமானவிரதமானலு மநுஷ்டிக்கிறேன். அருள் புரியவேண்டுமென்று பிரார்த்தித்தாள். இப்படி வருந்திப் பிரார்த்தனை செய்த ருக்குமணியைப்பார்த்து, நீ இப்படிப் பலதடவை சொல்லியிருக்கிறாய்; நா

னுக் கிள்ளையில்லாத விசாரத்தால் எல்லாவற்றையு ம
றந்து அதிகவலையாக விருக்கிறேன். என்று சொல்
லி. ஒரு முகூர்த்தம் தியான சமாதிகூடியிருந்தார். தி
யானித்த பிறகு சகலமானவர்க்கும், சர்வாபீஷ்டதா
தாவாயுள்ளவர் ஸ்ரீ பரமேசுவானேயென்று தெரிந்து,
ருக்குமணியைப் பார்த்துக், கைலாஸநாதனைத் தியா
னித்தால் ஸர்வசித்தியும் கைகூடும். அவரைத் தரி
சித்தால் ஞானம், பக்திகளுண்டாகும், ஸ்ரீ கைலாசத்
தில் நந்தி, பிருங்கி முதலியோரால் பணி புரியப்பட்
டவராய், இரத்தினஸிம்மாசனத்தில் பக்த ரட்சணார்த்
தமாக எழுந்தருளியிருக்கின்ருர்.. நமக்குப் புத்திரபா
க்கியத்தத்தருள்பவர் அவரைத்தவிரவேறில்லை. ஆகை
யால் அவரைச்சரணமடைவோம். அவர் சர்வலோககர்
த்தராயும், ஜோதிமயமாயும், ஆனந்தரூபராயும், விரு
ஷபத்துவஜராயுமிருக்கின்ருர். அவரைத் தரிசிப்போம்
என்று ருக்குமணிசமேதராய் ஸ்ரீகைலாசத்துக் கெழுந்
தருளினர்-

இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

# மூன்றாவது அத்தியாயம்.

---

இவ்வாறு கைலாசம்போய் ருக்குமணி ஸமேதரான கண்ணன் மங்கைபங்காளன் மலரடிபணிந்து, தனது கருத்து நிறைவேறும்படி பக்தியோடுதுதித்தார்: நற்குண வல்லபா! மங்கள வரந்தந்தருளும் கங்காதரனே! சாந்தமூர்த்தியே! ஞானசொரூபியே! ஸம்ஸாரஸாகரந்தாண்டுவதற்கான ஓடமே! தேவாசுரர்களைச் சிருட்டிக்கின்ற தேவதேவனே! அர்த்தநாரீசனே! பக்தஜனபரிபாலனே! ஆநந்தமருள்புரியுமாண்டவனே! பரபர்வதத்தை நிர்த்தூளிசெய்யும் பரமேசுவரா! பிரணதார்த்திகரா! இஷ்டசித்தியளிக்குமீசனே! நீயேயெனக்குப்பிதா, மாதா, குரு, சம்ஸாரதாபத்தைப் போக்கடிக்கும் பரதெய்வம். பிரமாதிதேவர்கள் பணிந்துதுதிக்கும் ஜகதீசனே! அழியாதவஸ்துவே! பிறருதவியையெதிர்பாராதபெருமானே! அறிதற்கரியவகிலநாயகனே!

வாக்குக்கெட்டாதவள்ளலே! ஷட்குணைசுவரியசம்பந்த அப்பனே யுனக்கு நமஸ்காரமென்று துதித்து நிற்கின்ற நாமனைக் கண்ணனை கிருஷ்ணனைப் பார்த்துச்சிவ பெருமான் புன்னகை புரிந்தருளி, மேகநோஷமொத்த கம்பீரதொனியோடுகூறுகின்றார்- ஏகிருஷ்ணா, நீதான் லோகநாதன், பக்தபரிபாலகன்- நீதான் நான்;நான்தா னீ சந்தேகமேயில்லை- உண்மையாய்ச் சொல்லுகிறேன்; உனக்கு மெனக்கும் பேதமில்லை-வித்தியாசமாய் என்னுபவர்கள் நரகமடைவார்கள்- நீ அறியாதவன் போ லுலகத்தை மோகிக்கச்செய்து, தர்மத்தை நிலைநிறுத் தும் பொருட்டுப் பிள்ளைவரமளிக்கும்படி யென்னைப் பிரார்த்திக்கின்றாய் நாமிருவரும் நித்திய திருப்தர்கள்- பிள்ளையாலாவதென்ன? ஆயினும் நீ எந்தக்காரணத் தால் பிள்ளைவரங்கேட்கிறாயோ வதையுத்தேசித்துச் சொல்லுகிறேன்.பூமியிலெனக்குப்பிரியமானவோர்புண் ணிய க்ஷேத்திரமுண்டு- அது மோட்சத்தைத் தரும்

னைத்தைக் கொடுக்கும், பரிசுத்தமான அநேகருடங்க ளத்தையுந்தரும். கீர்த்தி, ஐசுவரியம், பக்தி, ஆசையின் மை, புண்ணிய முதலியவற்றைத்தரும். அந்தப்பெ ருமை பொருந்திய க்ஷேத்திரம் காவேரிக்குத் தெற்கே, கிழ்கடலுக்குமேற்கே, ஸ்ரீ வாஞ்சியத்துக்குக் கிழக்கே யுள்ளது, வடாரணியமென்று பெயர்பெற்றது, அதில் பலவிதமான விருட்சங்களுமுண்டு. சக்கரவாகபட்சி கள் அங்கே நிறைந்திருக்கின்றன. அதிற் புண்ணிய தீர்த்தமொன்றுண்டு. சத்திய லோகத்தை யளிக்கும். முனிவர்கள், சித்தர்கள், சாத்தியர்கள், முதலான தேவ கணங்கள் வசிக்கின்றன. வாலியினால் பூஜிக்கப்பட் டது. அதற்குச் சமானமானஸ்தலம் இதற்கு முன்னு மில்லை. இனியுண்டாகப் போகிறதுமில்லை. புண்ணிய ஸ்தலங்களிலதுதான் மேலானது. எனக்கு மிகுதியும் பிரியமானது. பல்லாயிர வருஷங்களாகவெனக்குக் கி ரீடஸ்தானமாயிருக்கின்றது. இந்த ஸ்தானத்தில் ஸ்

தவன் மூடனானாலும் ஞானியாவான். இந்த க்ஷேத்தி
ரத்தில் நான் கிரீடிக்கிறசமயத்தில் தெரிந்தாகிலுந் தெ
ரியாமலாகிலும் யாரேனும்வந்து விட்டால் அவர்கள்
பெண்ணுகக்கடவதென்று என்னால் முன்னமே கூறப்
பட்டிருக்கிறது. அந்த க்ஷேத்திரத்துக்கு இவ்வரங்கொ
டுத்துவிட்டு நான் கைலாசம் வந்துவிட்டேன்.

ஸ்ரீ கிருஷ்ணா! ஓர் ஆண்குரங்கு தன் ஜாதிக்கு
ரங்குகளோடு அங்கு மிங்கு மலைந்து திரிந்து கடைசி
யில் வடாரணியம் வந்து சேர்ந்தது. வரவே யதற்கு
ஆண்ரூபம் போய்ப் பெண் சொரூபம் வந்துவிட்ட
து. அது தான் பெண்ணானதைக்கண்டு மிகவும் பயந்து
திரிகையில் தேவேந்திரன் அந்தப் பெண்ணைப்பார்த்து
மோகித்து அதனோடு புணர்ந்தான். உடனே யொருகு
ழந்தை பிறந்தது. சூரியனும் வந்து புணர்ந்தான்
அவனுக்குமொரு பிள்ளைபிறந்தது. அப்பெண் குரங்கு
இரண்டு குழந்தைகளை யெடுத்துக்கொண்டு வெளிப்

பட்டவுடனே புருஷனும் வந்துவிட்டாது. பின் இரண்டு பிள்ளைகளையுமழைத்துக் கொண்டு வடாரணியம் வந்து அடைந்தது. அந்தக்ஷேத்திரம் வராஹமூர்த்தியாற் பூஜிக்கப்பட்டு வெகுகாலங்களாய் விட்டபடியால். ஜீரணமாயிருந்தது. மூத்தபிள்ளைக்கு வாலியென்றும் இளையபிள்ளைக்குச் சுக்கிரீவனென்றும்பேர். இருவருமஹாபலசாலிகள். அந்தவனத்திலுள்ள பழவர்க்கங்களைத்தின்று வளர்ந்து யவ்வனத்தை யடைந்தார்கள். இப்படியிருக்கையில் வாலிக் கொருயோசனை தோன்றிற்று.

வானரஜாதிகளில் நான்தான் முதற்பிறந்தவன் சொந்தமான இனத்தாரைப்பரிபாலிக்கத் தக்கவன்- தனது சொந்தப் பிரஜைகளுக்குத் தனம், இரத்தினம், கம்பள முதலியவைகளைக் கொடுத்து இரட்சிக்கிறவனேயிந்தவுலகத்தில் தன்னியனாவான். அவனே சாக்ஷாத் பரமசிவன்- சொந்தஜனங்களைப் போஷிக்கிறவனைத்

தேவர்கள் கைலாசத்திற் கொண்டுபோய்ச் சேர்க்கிறார்கள். தனது பிரஜைகளை விரோதிப்பவனெடுத்த ஜன்மம்வினும். புத்திரமித்திரகளத் திராதிகளோடு மந்திரிஸைழிதனாயிருந்து தன் பந்துக்களை ரட்சிக்கிறவன்தான் || முடிவாத்தால் இது எப்படி. திரையைப் போகிறதென்று எப்பொழுதும் விசாரப்பட்டுக் கொண்டிருந்தான் இப்படி யிருக்கையில் நாரதமுனிவர் அவ்விடம் வந்து வாலியைப் பார்த்துச் சொல்லுகிறார். வாலி, நீ நினைத்தகாரியம் இவ்விடத்திலேயே உனக்குச் சித்தியாம். இதைக்கண்டமாத்திரத்தில் சகல பாபங்களும் விலகும் நினைத்ததுகைகூடும். நானுமிவ்விடத்திலேயே காரியசித்திபெற்றேன். இங்கே முனிலிங்கமென்று ஒன்றுண்டு. அது கேட்டதைத்தரும். நல்லவில்வதளம், மல்லிகை, முல்லை, முதலான புஷ்பங்களை எடுத்து அருச்சித்துப் பூஜைபண்ணு. மகரசங்கிராந்திகாலத்தில் புத்திரகாமதீர்த்தத்திலும், முனி தீர்த்தத்திலும் ஸ்நானஞ்

செய். முனிலிங்கத்தைப் பூசைசெய், நிச்சயமாய்ப்பிர மலோகத்தையடைவாய் என்று சொல்லி அந்தத் திர்த் தத்தில் ஸ்நானஞ்செய்து, முனிலிங்கத்தைப் பூசை செய்து துதித்துப் பிரமலோகம்போனர். பிறகு வாலி யிரண்டு தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து, முனிலிங் கத்துக்கு ருத்திராபிஷேகஞ் செய்து, பத்திர புஷ்பங்க ளாலருச்சித்துப், பலவகை நிவேதனஞ்செய்து, வலஞ் சூழ்ந்து பணிந்து துதிக்கான் எல்லைகாண்பரிய ஈசனே! அறியாத அநாதிமுதல்வனே! அகிலவுலகங்களைப் ப டைத்தகர்த்தனே! பிரமன், சந்திரன், சூரியன், இந்தி ரன்முதலியோர்க்குப் பதவியளித்த பரமனே! அளவி லாத வேதாகம சாஸ்திரங்கள் வகுத்தருளியகாரண னே! காருணைக்கடலே! யாகரூபியே! யாகத்தின்பயன ளிக்கும்பரமனே! மோட்சமளித்தருளு முதல்வனே ? கைலாசநாதனே யுமக்கு நமஸ்காரம் என்று துதித்த வாலியைப் பார்த்துப் புன்னகை கொண்டு கம்பீரமா ய்ச் சொல்லுகிருர்-

மூன்ருமத்தியாயம்முற்றிற்று-

## நான்காவது அத்தியாயம்

ஏ! வாலீநீ செய்த பூஜைக்கு மனமகிழ்ந்து திருப்தியடைந்தோம்- இதிலே சந்தேகமில்லை- உன்மனதிலுத்தேசித்திருக்கிற வார்த்தைக்கேள்- தருகிறேன் என்று மொழிந்தருளினர். இதனாலானந்த பூரிதனாகிய வாலிஈசன் திருவடிபணிந்து, சம்போ உமது தரிசனத்தால் நான் கிருதார்த்தனானேன். எனது ஜன்மம் ஸாபல்யமாயிற்று- உமது தரிசனமிருத சாகரத்தில் மூழ்கிக்களிப்படைந்த வெனக்கு வேண்டியதுவேறென்ன விருக்கின்றது- இந்தத் தரிசனத்துக்கு மேற்பட்டதுதானென்னவுண்டு? ஆயினும் ஆண்டவன் ஆக்ஞையைச்சிரமேற்கொண்டு கேட்கிறேன்- என்னைக்குரங்குகளுக் கெல்லாம் ராஜனாக்கவேண்டும். நானும்என் பரிவாரமுங் குடியேறவொரு இடங்காட்டவேண்டும் உலகத்தில் எதிரற்று வாழ்ந்து, அந்தத்தில் உமது திருவடியை அடையவேண்டும்- இதுவே யென்கோரிக்கை

யென்றான்- ஏ வாலீ நீ விரும்பிக்கேட்டபடி கொடுத்தேன்; கடைசியில் நான் ராமாவதாரமெடுத்து உனக்கு மேலான பதவியைக் கொடுக்கிறேன்- அதைப் பற்றி விசாரப்படவேண்டாம்- ஆண்டுதோறும் மகாஸங்கிராந்தி புண்ணிய தினத்திலிங்கேவந்து, ஸ்நானஞ் செய்து, பரிசுத்தனாகி யென்னைப் பூஜைசெய். இவ்விடம் வந்து என்னைப் பூஜிக்கும் பக்தர்களுக்குப் பூர்ண சம்பத்களிப் பேனென்றார்- வாலியும் மஹாதேவன் ஆக்ஞைப்படி நடந்து வாழ்ந்தான்- அது முதலாக அந்தவனத்துக்கு வாலிவனமென்றுபெயராயிற்று- ஜீர்ணமாய்க் கிடந்த கோயிற்றிருப்பணிசெய்து திருவிழா நடத்தி வந்தான்- அந்தஸ்தலத்தைத் தரிசித்தாலும், அந்தத்தீர்த்தக்கரையில் ஒருக்ஷணம் உட்காந்திருந்தாலும், கைலாசமடைவார்கள்-அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தவர்கள் பெறும்பேறு சொல்லிமுடியாது- வாலிவனஞ்சென்று வாலீசரை ஒரு நாட்பூசை செய்

தால் கினைத்தருகிடைக்கும்- ஆகையால் ஏ கிருஷ்ண நீ என்னணிபபடி. புத்திரார்த்தமாகவும். லோகாட்சணார்த்தமாகவும் வாலிவனஞ்சென்றென்னைப் பூசை செய். புத்திரவரத்தைக் கருதி என்னைப்பூஜிக்கப்போகிறபடியால் எனக்குப் புத்திரகாமேகவரரென்று பேராகும் என்றார்- அவ்வாறே சென்று அசோகு, புன்னாகம், விளா, முதலிய விருட்சங்களும், மல்லிகை. ஜாதி முதலிய புஷ்பங்களு மலர்ந்து, கோகிலங்கள் பாடுவதும், மயில்களாடுவதும், சித்தர், சாரணர், கந்தருவர், யட்சர். அப்ஸரஸ்திரீகள் முதலானவர்கள் வந்து ஆராதிப்பதுமாகவிளங்கும் திவ்யக்ஷேத்திரத்தைக் கண்ணன் ருக்குமணி தேவியோடு தரிசித்து, மயிர்க்கூச்செறிந்து, வடாரணியத்தை நமஸ்கரித்து, சித்த தீர்த்தத்தில் பத்தினியோடு ஸ்நானஞ்செய்து, பீதாம்பரமணிந்து, அங்கு வசிக்கும் முனிவர்களோடு லோககர்த்தாவான கண்ணன், ஸம்ஸாரபந்தத்திலகப் பட்டவர்க

ளைப்போலப் போதாயன விதிப்படி பூஜைசெய்தார். விநாயகர், முகுளாம்பாள், சண்டிகேசுரர், முதலானவர்களையும் வில்வமுதலிய பத்திர புஷ்பங்களாலருச்சித்து விசேஷ நிவேதனங்கள் செய்து, ஆலவிருட்சத்தையும் ஸ்தாபித்தார்- அந்த விருட்சம் மேல்பக்கத்தில் இந்திர நீலக்கல்லைப்போலப் பிரகாசித்துக்கொண்டு, தரிசித்தவர்களுக்குச் சர்வ மங்களமளிப்பதாயும் மோக்ஷங் கொடுப்பதாயும், தொட்டவர்களுக்குச் சகல சித்திதருவதாயும் ஆலிங்கனஞ் செய்தார்க்குடனே புத்திரசந்தான மீவதாயும், தன்னிழலிலடைந்தவர்க்குப் பிரமராக்ஷஸாதி பீடைபோக்குவதாயும் விளங்குகின்றது- கண்ணன் சாகுபட்சணஞ்செய்துகொண்டு ஒரு நாட் கூடத்தவறாமல் பன்னிரு வருடகாலம் பரசிவனை யாராதித்துக் கடைசியில் துதிசெய்யத் தொடங்கினர்.

நான்காவது அத்தியாயம்

முற்றிற்று-

# ஐந்தாவது அத்தியாயம்

ஏ ! கங்காதரா! சாந்தமூர்த்தியே நல்லபூர ணங்களைக்கொண்டன்றித் தேவர்களாலுமறியப் படா தவனே! சமஸ்த துக்கங்களையுமொழித்தருள்பவனே ! வேதங்களாலறியப் படும் விமலனே! சந்திரசேகரா! ச முசாரசாகரத்துக்குத் தெப்பமே! ஞானசொரூபியே! சத்குணமலையே ! பிரம்மாதி தேவர்களெல்லாரும் வ ணங்கும் வாதனே! அர்த்தநாரீசா! ஆனந்தரூபியே ! கருணாகரா,பாவநுக்கு மேலானவனே, முத்திபளிக்கு முதல்வனே, மாயைகடந்தவள்ளலே, மாயையை வி லக்கும் வல்லபனே. வாக்குக்கெட்டாதவனே, மங்க ளசொரூபியே, யக்ஞசொரூபனே யக்ஞேசனே, தங் கன் யாகந் தகர்த்தசங்கரா, மூலகாரணா. காமதகனா; யோகநாதா, உமக்கு நமஸ்காரம்; நீர் மங்களமாய் விள ங்குக. பார்வதிநாதா புத்திரபாக்கியமில்லாத வென் னையுமென் மனைவியையும் காப்பாற்றவேண்டும். நானி

வ்விடந்தவம் புரியவந்து பன்னிரண்டு வருடங்களாயி
ன எனது மாதாபிதாக்கள் விருத்தாப்பியர்கள்.உக்கிர
சேனர்முதலானவர்கள் மிக வருத்தப்படுவார்கள்- ஆ
கையால் என்னிஷ்டத்தை நிறைவேற்றிக் காப்பாற்ற
வேண்டும் என்று கண்ணபிரானானவர் சிவனுக்கபேத
மாயிருந்தாலும் ஜகத்தை மோகிப்பிக்கும் பொருட்டுப்
பலதரம் பணிந்தார். இது கேட்டவாலீசர் பிரத்தியட்
சமாகிக் கோவிந்தனைப் பார்த்து ஏ கிருஷ்ணா! நீ லோ
ககர்த்தா அல்லவா! ஞானானந்த ரூபியல்லவா! பூமி
பர்ரந்திர்க்கவல்லவோ வசுதேவர் குமாரனாயவதரித்
தாய், ஆகையாலுனக்கு உத்தமமான புத்திரனை அளி
ப்பேன் உனக்கு மெனக்கும் பேதமில்லை. பேதமாய்
நினைக்கிறவன் அதோகதியடைவான். இருவருமன்னோ
பிஷ்டமளிக்கத் தக்கவர்களேயாம். லோகபாலகாள் ஏ
தோ நான் கொடுக்கிறவன்போலவும் நீவாங்குகிறவன்
போலவும் துதித்தாயே; உனக்கு நல்ல பிள்ளையுண்
டாகும்.நீ உன் நகரத்துக்குச் சென்று சுகமாகவாழந்தி

ருங்கடவாயென்று அநுக்கிரகஞ் செய்தருளினர். இதுகேட்ட கண்ணன்மீண்டும் வணங்கிச் சுவாமீ, இந்த க்ஷேத்திரத்துக்கென் பெயர்வழங்கவேண்டுமென்று பிரார்த்தித்தான் சிவபெருமானப்படியே யாகட்டும் இந்த க்ஷேத்திரத்துக்குப் புத்திரகாம க்ஷேத்திரமென்றும், எனக்குப் புத்திரகாமேசுவரரென்றும், கிருஷ்ண க்ஷேத்திரம் வாயுநாதனென்றும் பெயர்வழங்கப்படுவதாக இந்த க்ஷேத்திரத்தில் ஒரு க்ஷணப்போதாவது வசிப்பவர்கள் சிவகிருபையால் சிவசாயுஜ்யமடையட்டும் என்றருள் புரிந்தார். பிறகு இங்கே ஒருக்ஷணமாவது பூஜிப்பவர்கள் சிவனேயாவார்கள். என்னல் ஸ்தாபிக்கப்பட்ட ஆலவிருட்சத்தின் கீழ்வசிப்பவர்களுக்கு நான்கு புருஷார்த்தங்களுமுண்டாகக் கடவது. இதுமுதலாகவிந்த க்ஷேத்திரத்துக்கு வடாரணியமென்றுபெயர் வழங்குக. வாலீசருக்கு வடேசரென்று பெயர் வழங்குக. தேவதைகளெல்லாரும் வடேசுவரரென்றுபெயர் கூறட்டும் என்று வரமளித்துப், பின்பு கருடத்துவ

னும், சித்தர்களால் வணங்கப் பட்டவனும், லோகர க்ஷகனுமான ஸ்ரீ கிருஷ்ணபகவான் துவாரகா பட்டணம் போய்ச் சேர்ந்து சுகமாய் வாழ்ந்திருக்கையில் பிரத்தியும்நன் என்று ஓர்புத்திரன் பிறந்தான். ஸ்ரீ கிருஷ்ணன் ருக்குமணி தேவியார் முதல் யாவரும் சந்தோஷமாயிருந்தார்கள்.

ஐந்தாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## ஆறாவது அத்தியாயம்.

--**--

என்று கூறிச் சூதமுனி சௌனகாதியோரை நோக்கிச் சௌனகாதிமுனிவர்களே! இவ்வாறுகக்கிருஷ்ணனுக்கு வரமளித்த அந்த மஹாக்ஷேத்திரத்தில் ஒரு க்ஷணம் எவனாவது வசித்தால் அவன் மோட்சமடைவான். சிவபெருமானெழுந்தருளி யிருக்குமிடத்து

ஈசான பாகத்தில் தீர்த்தத்துக்கு வடகரையில் கிரு
ஷ்ண மூர்த்தியால் ஸ்தாபிக்கப்பட்ட ஆலவிருட்சமி
ருக்கின்றது. அந்த விருட்சமூலத்தில் தேவதைகள்
வசிக்கின்றார்கள். அவ்விடத்துப் பிண்டதானம் பண்
ணினால் பிதுர்க்கள் கற்பகோடி காலந் திருப்தியடை
வார்கள். சிராத்தம் பண்ணினால் கயையிலழியாத ஆலின்
கீழ்ச்செய்த சிராத்தத்தைவிட நூறுபங்கு பலன்
அதிக முண்டாகும். இந்த விருட்சத்தினடியில் வசிப்
பவருடைய கை நம்மேற் படவுங்கிடைக்குமோ வென்
றும், பட்டால் நன்மை யுண்டாமென்றுந் தேவர்கள் கூ
றுவார்கள். பூர்வ ஜன்மங்களில் வெகுவான தபசு
செய்திருந்தால் இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ண
வும் அச்சிவாலயத்தைத் தரிசிக்கவும் பக்தி யுண்டாம்.
வந்தனம் பண்ணினால் மோட்ச முண்டாகும் பூசை
பண்ணினால் சங்கரனாவான். பிரதட்சணம் செய்தால்
பூமியைப் பிரதட்சணஞ் செய்த பலனுண்டாகும். அந்
த ஆலவிருட்சத்தின் கீழ்ப் பிராமணர்களுக்குத் தேன்

எண்ணெய், பால், கறவைப்பசு, எள்ளு முதலியதானங்கொடுத்தால்ஒன்று கோடியாகப் பலன்றரும். கால்கை குறைதல், காசம், ஜுரம், மேகவியாதி, நீர் ரோகம் முதலிய சமஸ்தரோகமும் தீரும். இந்த ஜன்மத்திலும், முந்தியஜன்மங்களிலும் செய்தபாபமும், மாதாமகர்செய்ததும், கூடப்பிறந்தவர்களைப் பணம்வாங்கிக்கலியாணஞ் செய்து கொடுப்பதும் தன்பத்தினி குலத்திற் செய்ததும், சிநேகர், வேலைக்காரர் செய்தது முதலிய பாபங்களெல்லாந்தீரும். சிராத்தகாலத்தில் கயையை நினைத்தல், பஞ்சாட்சரஜபம், விபூதி, ருத்திராட்சதாரணம், எப்பொழுதும் சர்புவைத் தியானித்தல்,சிவபக்தர்களைச் சேர்தல், அன்னதானஞ்செய்தல் அநாதைகளை ரக்ஷித்தல், சோமவார விரத மநுஷ்டித்தல், பிரதோஷத்தில் சிவபூஜைசெய்தல், ஜீரணமான சிவாலயத்திருப்பணி செய்தல், சிவோற்சவதரிசனஞ் செய்தல், சிவோற்சவ நடத்துதல், சிவபக்தர்களோடு

பேசுதல், சிவகதைகேட்டலாதிகளாற் பெறும்பயனெ ல்லாம், வடவிருட்சதரிசனத்தினால் கிடைக்கும். அஸ் தியைப்பற்றினபாபமும், மயிரைப்பற்றினதும், மனம், வாக்குக், காயங்களாற் செய்யப்பட்டதுமாகிய பாபங் களெல்லாம், வடேசுவரதரிசனத்தால் நீங்கும். துக் கம், மோகம், ஐன்னியிவைகள் வாரா. தரித்திரஞ் சேராது. செல்வம், கல்வி, தைரியம், கீர்த்தி, பொறு மை, பூரணாயுசுபெற்றுச் சிவபிரானுக்கு நேசனாவ ன். மூன்று, ஐந்து, ஏழு அல்லது பத்துநாள் அந்த ஆலயத்தைப் பிரதட்சணம் பண்ணினால் சந்தானம், சம்பத்து, பசுக்கள், பின்னுமென்னென்ன நினைக்கிறா னோ அவைகளெல்லா முண்டாகும். பிரமஹத்தி, கோ ஹத்தி, சிசுஹத்தி, சுராபானம், சுவர்ணஸ்தேயம், கு ருதாரகமனம், பரதாரகமனம், துர்த்தானம் வாங்குதல் துர்ப்பாஷைபேசுதல், துஷ்டரோடுசேர்தல், கோட் சொல்லுதல், சூதுசெய்தல், தெய்வமில்லை யென்று

நாஸ்திகம் பேசுதல், சிவத்துரோகம், குருதுரோகம்,
விஷமிட்டுக் கொல்லுதல், முதலான பாபங்களெல்
லாம் வடேசுவரதரிசனத்தாற்றீரும். கிருத்திகாசோம
வாரத்தில் வடாரணிய க்ஷேத்திரத்துக்குப் போய்ச் சி
வபெருமானையர்ச்சித்து, மாவிளக்கேற்றிப் பிராமணர்
களுக்குச் சமாராதனைசெய்து, ஆலயத்தைப் பிரதட்ச
ணம் செய்து விட்டால் அவன் கிருதார்த்தனுவதோடு
பிதுர்க்களும் நல்லகதிபெறுவார்கள். தருமராஜன்
தூதர்களைப் பார்த்து நீங்கள் வடாரணியத்துக்குப்போ
காதீர்கள். அங்கே யிருக்கும் மனிதர்கள் ஜனனமரண
பரியந்தஞ்செய்துள்ளபாபங்களெல்லா நசித்துப்போகி
றது. ஆகையால் அங்கேபோனுல் சங்கரன் உம்மைத்
தண்டிப்பார் என்று அடிக்கடி சொல்லுகிறுன். அந்
த ஆலவிருட்சத்துக்கு மேடைகட்டுகிறவன் தன்னியனு
வான். அவனேசிவன், அவனுடைய மகிமைகளை
வர்ணிப்பவரிந்தப் பதினுலுலோகங்களிலுமில்லை. வெ

ள்ளி, செவ்வாய், ஞாயிறு, வியாழனிந்த வாரங்களில் ஆலவிருட்சத்தைப் பிரதட்சணஞ் செய்தால் அவன் முக்தனாவான். கிருஷ்ணாஷ்டமியில் அந்த ஆலவிருட்சத்தை யாலிங்கனஞ் செய்தால் ஸகல பாபங்களும் நாசமாகும். ஏகாதசி, திரயோதசி, அமாவாசை, பௌர்ணமாவாசை இந்தக்காலங்களில் பிரதட்சணப்பண்ணிஞல் சகல சம்பத்துக்களு முண்டாகும். எள்ளு, தேன், எள்ளுண்டை இவைகளைத் தானஞ்செய்தாலும் சுக்கிரவாரத்தில் பிராமணர்களுக்குச் சாப்பாடும் கொடுத்தாலும், செவ்வாய்க்கிழமையில் வடை, அதிரசம் இவைகளைத் தானஞ் செய்தாலும், வியாழக் கிழமை பழம், கிழங்குகள், பால், நெய் முதலிய தானஞ்செய்தாலும். சமஸ்த ஐசுவரியமும் உண்டாகும். குதிரை, யானை முதலிய தானஞ் செய்தால் சங்கரனாவான். இந்த மாஹாத்மியத்தைக்கேட்டால் அவனடையாதபலன் கிடையாது.

ஆறுவது அத்தியாயம்
முற்றிற்று-

# ஏழாவது அத்தியாயம்.

---

சௌனகர் கேட்கிறார் சூதமுனிவரே, மகா
ஞானசிகாமணியே! சகலசாஸ்திரங்களுமுணர்ந்தவரே
வட்டாரணியமான்மிய முழுமையும் விடாமற்கேட்க வி
ரும்புகிறேன். சித்ததீர்த்த மென்று ஒன்றிருப்பதாகக்
கூறினீர்களே! அது எக்காரணத்தாலுண்டானது? அ
து எவ்வகைப்பட்ட பலனளிப்பது? முனிலிங்க மென்
று பெயர் கூறினீரே,யது ஏன் வந்தது! அங்கே யின்னு
மென்ன தீர்த்தங்களுண்டு? எவ்விடத்திலிருக்கின்றன?
இவைகளைத் தயவு செய்து விஸ்தாரமாய்ச் சொல்ல
வேண்டு மென்றுவினவினார்.

சூதர் சகல பாபங்களையும் நாசஞ்செய்து,
சர்வ மங்களங்களையுந் தரத்தக்க முனி லிங்கமென்று
பேர்வந்த காரணத்தைச் சொல்லுகிறேன்- கேளுங்

சௌநகரேயென்று சொல்லத் தொடங்கினர். ஒரு காலத்தில் பிரமாவின் புத்திரர்களான தேவரிஷிகளுக்குள் சிரேஷ்டரான நாரத மஹாமுனிவர் தமதுபிதாவினிடஞ் சென்று சுவாமி! எனக்கு ஞானமும், சிவபக்தியும், சிவசேவையும், கீர்த்தியும், எங்குஞ் சுற்றித்திரிதலால் அவ்விடங்களில் ரட்சணமும் உண்டாகும் மார்க்கத்தைச் சொல்லியருளவேண்டும் என்று நமஸ்கரித்துக் கேட்டார். பிரமதேவன் தனது புத்திரனாகிய நாரதரைப்பார்த்து, உனக்கு ஞானமுதலியன உண்டாகும் வழிசொல்லுகிறேன் கேள்! எப்பொழுதுஞ் சிவநாமஞ் சொல்லவேண்டும். சொன்னால் பிரமஹத்தி, மத்தியபானம் செய்தல், ஸ்திரீஹத்தி, குருதாரத்திரோசை, தாய்க்கொலை, பிடிவாதம், விடத்தனம், வேதாத்தியயனஞ் செய்யாமை, பரான்னம் புசித்தல், அக்கினி ஹோத்திரஞ் செய்யாமை, கோட்சொல்லுதல், மோசஞ்செய்தல், பசுவிர்த்தி, பிராமணர்

சொத்தைகயபகரித்தல், தேவர்கள் பிராமணர்களிவர்க ளைத் தூஷித்தலால் வரும்பாபங்களெல்லாம் பறந்து போகும். இந்த ஜன்மத்திலும், பூர்வ ஜன்மத்திலுஞ் செய்த பாபங்கள் ருத்திராட்ச தாரணத்தால் நாசமா கும். பேதாளம் பிரமராக்ஷஸ், சிசுவைக்கொல்லும் பி சாசு முதலிய துஷ்டக்கிரகங்கள் விபூதிதரித்தால் கிட் டநெருங்காது. ஞானம், கீர்த்தி, சக்கிரவர்த்தித்துவ மிவைகளுண்டாகும். மூடத்தனம், பைத்தியம் முத லிய வெல்லாரோகங்களையும் போக்கும். சரீர புஷ்டி யுண்டாகும். சிவதத்துவ விசாரணை, சிவபூசை, சிவ பக்தர்களிடமன்பு பாராட்டல், சிவாகமங்களைத்தெளி தல், ஸோமவாரவிருதம், பிரதோஷவிருதம். பில்வா ர்ச்சனை, சிவத்தியானமிவைகள் செய்கிறவன் மோட் சமடைவான். சுத்தமாயும், ஸ்படிகம் போலவும் பிரகா சிக்கிறஞானாநந்த ரூபியான பரமசிவனை ஸ்மரித்தால் ஸர்வபாபமும் நசிக்கும். ஒருதரம் வில்வ பத்திரத்தால்

மஹாதேவனை யருச்சனை செய்தால் கைலாசபதவி கிடைக்கும். பார்வதிகாந்தனாகிய சந்திரசேகரனைத் தியானித்தால் அவன் சிவனே யாகிறான். ஆகையால் எப்படியாவது சிவபக்தி பண்ணவேண்டும்.

ஆனால், எந்த க்ஷேத்திரத்தில் வசித்தால் மோக்ஷம் கிடைக்குமோ அந்த ரகசியமான ஸ்தலத்தைச் சொல்லுகிறேன் கேள். தண்டகவனத்தோர் பாகத்தில், காவேரி தீரத்துக்குச் சமீபத்தில் வடாரணியமென்றொரு க்ஷேத்திரமிருக்கிறது. அது கைலாசத்துக்குச் சமமானது. அது பூமியில் வெகுகாலமாயிருக்கிறது. கிருஷ்ண மூர்த்திக்கும் வாமனித்தஸ்தலம். அவ்விடத்திலிருக்கிற வடேசுவர மூர்த்தியைச்சரணமடை. அது தவிர உனக்கு நினைத்ததைக் கொடுக்கத்தகுந்த ஸ்தலம் வேறொன்றுமில்லை. எனக்குச் சிருஷ்டிகர்த்துருத்துவசாமர்த்தியம் அங்கேதான் சித்தித்தது. அவ்

விடத்தில் நான் என்பேராலொரு தீர்த்த முண்டாக்
கியிருக்கிறேன். அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி
வடவிருக்ஷ நிழலிலிருந்து சங்கரனைக் குறித்து ஜபம்
பண்ணிவந்தேன். நந்திமுதலிய பரிவாரத்தோடு பா
மசிவர் எனக்குப் பிரத்தியக்ஷமாகி வேண்டிய வரம
ளித்தார். அந்த க்ஷேத்திரத்தில் சிவாலயமிப்பொழுது
ஜீர்ணமாயிருக்கிறது. நீ யவ்விடம் போய்த்திருப்பணி
புரிந்துமகாஸங்கிராந்தி புண்ணியகாலத்தில் சிவபூஜை
செய்தால் உனது மனோபீஷ்ட நிறைவேறும். நீ யெ
னக்குப்புத்திரனாகையாலிந்த இரகசியத்தை யுனக்கு
ச்சொன்னேன். கர்வமுள்ளவனுக்கும், எல்லாம்படித்
து விட்டோமென்று தன்னைத் தானேபுகழ்ந்து கொள்
பவனுக்கும், விடனுக்கும், பணவாசை பிடித்தவனுக்
கும் சொல்லக்கூடாது. இதற்கு ஈடான ஸ்தான
மிப்பொழுது பூமியிற் கிடையாது என்று மொழிந்த
ருளினார்.

அதைக் கேட்ட நாரதர் பூலோகம் வந்து, ஸ்ரீவாஞ்சியத்துக்குக் கிழக்கே, காவேரிக்குத்தெற்கே, சவுரிராஜருக்கு வாயுதிக்கில் வடாரணியத்தைக் கண்டு ஜீரணமாய்க் கிடந்த கோவிலைப்புதுக்கி, ஆலயத்துக்கு வாயுதிக்கிலுள்ள பிரமதீர்த்தத்திற்குத் தென்கரையில், வில்வ விருட்சத்துக்குச் சமீபத்திலிருந்து, மகர சங்கிராந்தி புண்ணியகாலத்தில் பரமசிவனை யாராதித்து ஸ்தோத்திரம் பண்ணினார். சிவபெருமான் பிரத்தியட்சமாகி நாரதர் கேட்டதைக்கொடுத்தார். நாதர் முன்னிருந்த பிரமதீர்த்தத்தை வெட்டிப் பழுதுபார்த்தபடியால் அதற்கு முனி தீர்த்தமென்று பெயராயிற்று. அதில் ஸ்நானஞ்செய்தால் மகாபாபங்களும் தேய்விடும். ஸர்வமங்களமுண்டாகும். பிரமன், விஷ்ணு இந்திராதிவர்களாற்பூஜிக்கப்பட்ட பாதகமலங்களையுடைய மஹாதேவன் யோகிகளாலிதயாரவிந்தத்திலருச்சிக்கப்பட்ட திவ்யமங்களவிக்கிரகனான வடேசுரரைச்சரணம் அடைகிறேன்-

ஏழாவது அத்தியாயமுற்றிற்று

## எட்டாவது அத்தியாயம்

——(0)——

சூதர் தீர்த்தமகிமை சொல்லுகிறேன் கேளுங்களென்று சொல்லத்தொடங்கினார். சிவ பெருமானுக்கு ஆக்னேயதிக்கில் கிருஷ்ண மூர்த்தியால் ஸ்தாபிக்கப்பட்ட புத்திரகாம தீர்த்தமென்று ஒன்றிருக்கின்றது. அதற்கு ரிஷிபிரம்மா, தேவசைசங்கரன், விநாயகர்ரக்ஷகர், அதன் கரையில் பெரிய வட விருட்சமுண்டு- அதுமிகவு முத்தமமானது- ஸர்வலோகபிரசித்தமானது. பாபங்களை யெல்லாம் போக்கடிப்பது. இந்தத்தீர்த்தத்தின் மத்தியில் பைரவரிருக்கிறார். இவர்களை நமஸ்கரித்து ஸ்நானஞ் செய்ய வேண்டும்- வடநாதரைஸ்மரித்துத்தீர்த்த ஸ்நானத்துக்கு அநுக்ஞை பெறவேண்டும். எனக்குஞானம், பக்தி முதலியவற்றைக்கொடும், என் மனோபீஷ்டத்தை நிறைவேற்றும், பாதகங்களைப் போக்கடியும் என்று பிரார்த்திக்கவேண்டும்.

ஏ உமாதேவி புத்திரா ஜ்யேஷ்டகுமாரா, என்னைக்காப் பாற்றுவென்று பிரார்த்தித்துக்கொள்ள வேண்டும். இந்தப் பிரகாரமொவ்வொருதேவதையையும் பிரார்த்தித்து, எரு மை, நீலஎருது, கறவைப்பசு, எள்ளு, தேன், பழம், க ரிகாய், உப்பு, கன்னிகை, கொடை, கம்பளம், தாம்பூ லம், வெள்ளி, தங்கம், நெய், வெண்ணெய், தாசன், தாசி, சர்க்கரை, தானியம், தென்னை, அரிசி, பயறு இவை முதலிய தானங்கள் செய்யவேண்டும் மற்றவை யெல்லாமகப் படாவிட்டால் சர்க்கரைகலந்த அரிசி (காப்பரிசி) யாவது, எள்ளாவது தானஞ்செய்தால் மற்ற தானங்களெல்லாஞ்செய்த பலன் கிடைத்து வி டும். மகர ஸங்கிராந்தி புண்ணியகாலத்தில் அதில் ஸ்நா னஞ்செய்தால் கிருதகிருத்தியனுவான் வடவிருட்சத் தின் கீழ் பஞ்சாட்சரஜபம்பண்ணினால்சங்கரனுவான் சய்யாதானஞ் செய்தால் சிவபதமடைவான் கிருத்தி கா ஸோமவாரத்தில் ஸ்நானஞ்செய்தால் வெகுஉத்த

பலன் கிடைக்கும். ருத்திராக்ஷதாரணம் விபூதிதாரணம், சிவலிங்கதானம்; பஞ்சாக்ஷரஜபம்; சிவபக்தி சிவனடியார் பக்தி சிவநாமோச்சாரணம் சிவதரிசனம், சிவாலயத் திருப்பணி, சிவாராதனம் வடாரணியத்தில் வசித்தல் அதை தரிசித்தல். ஸோமவாரவிரதம் சிவராத்ரிவிரதம், பிரதோஷகாலத்தில் சிவ தரிசனம், பிரதோஷ விரதம், பிரபாதையில் மஹாசிவோற்சவம் நடத்திவைத்தல் [illegible] சேவித்தல் இவைகளாற்கிடைக்கக்கூடியபலம் சிவபூசைசெய்தவர்களுக்குத் தானஞ்செய்தாற் கிடைக்கும்-

ராமாயணங் கேட்குதல் பூர்வஜன்மத்தில் செய்தபுண்ணியத்தின் பலனாகும். கிருஷ்ணாஷ்டமியில் புத்திரகாமதீர்த்தத்தில் ஸ்நானம்செய்தால் சிவபதமடைவான் புத்திரனில்லாதபேர்க்குபுத்திரன் ஏழைகளுக்குத்தனமிவை கிடைக்கும். மூடன் வித்துவானு

வான்- ரோகங்கள் தீரும். அங்காரகபஞ்சமியில் ஸ்நானஞ்செய்தால் சிரசிலுள்ள வியாதிகள் தீரும். ஆலவிருக்ஷத்தை நாற்றிசையிலும் பிரதக்ஷணஞ் செய்தாலும் அவ்விருக்ஷத்தைத் தழுவிக்கொண்டாலும் அங்கே தானங்கள் செய்தாலும் பலஜன்மங்களிற்செய்தபாபங்கள் தீரும். சூரிய சந்திரகிரஹணகாலங்களில் ஸ்நானஞ்செய்தால் குஷ்டரோகம், க்ஷயரோகம் அபஸ்மார ரோகமுதலிய ரோகங்கள் தீரும். மகரமாஸ ஸ்நானத்தால் புத்திரனுண்டாவான். பிதுருக்களுக்குச் சந்தோஷமுண்டாகும். முன்னேயொருவௌவால் அந்தமரத்தில் தொங்கிக்கொண்டிருந்தது. ஒரு வேடனதை யடித்தான். அது தீர்த்தத்தில் விழுந்தது. உடனேயது திவ்ய சொரூபம் பெற்றுச் சிவலோகம்போய்ச் சேர்ந்தது· ஆதலால் மறந்தாகிலும் அந்தத்தீர்த்தத்தை தொட்டவர்கள் சிவபதமடைவார்கள்.

எட்டாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

# ஒன்பதாவது அத்தியாயம்.

சௌநகர் சூதரைப்பார்த்து, அந்த வேதாளம் என்னபாபத்தினாலிந்த மரத்தில்வந்து தொங்கிக்கொண்டிருந்தது? எப்படியிந்தத்திர்த்தத்துக்கு வந்தது? எப்படி நல்லகதியடைந்தது? என்று கேட்க வியாச சிஷ்யரான சூதர் சொல்லுகிறேன் சாவதானமாய்க் கேளும் சௌநகரேயென்று சொல்லுகிறார்.

சௌநகரே! மத்தியதேசத்தில் காம்பில்லிய மென்றொரு கிராமமுண்டு. அந்தக்கிராமத்தில் நாலு ஜாதிஜனங்களும், வித்வான்களு நிறைந்து யாவரும். அக்கினி ஹோத்திரஞ்செய்பவர்களாயும், பெருமைபெற்றவர்களாயும் பாபபுண்ணிய முணர்ந்தவர்களாயும் இதிஹாஸம் புராணம் ஸ்மிருதிகளின் கரைகண்டவர்களாயுமிருந்தார்கள். அங்கே யொருபிராமணன் வேதம் வந்தவனாயும் சகலசாஸ்திரங்களுந் தெரிந்தவனாயும்

இருந்தான். அவன் அநேக ஸ்திரீகளையும் அநேக புத்திரர்களுமுள்ளவன்; ஆசாரஹீனன் சகலமான வைதிக கருமங்களையும் விட்டுவிட்டு உதரபோஷணையொன்றையே பெரிதாகக்கொண்டு கங்காஸ்நானபலனை யோசனையில்லாமல் விற்றுவிடுவான். அவனுக்குங் கங்காதரனென்று பெயர். அந்தப்பாபி குலஹீனனுக்கு வேதாத்தியயனஞ் செய்துவைத்தான். வேஷாசம், பிரேதபோஜனம் செய்வான்; பிரேதவஸ்திரம் வாங்குவான்; ருத்திராக்ஷங்களைவிற்பான் விபூதியை விற்பான்; சிவநிந்தைசெய்வான் விஷ்ணுபக்தனென்று சொல்லிக்கொண்டு வைஷ்ணவர்கூட்டத்திற்சென்று யாசகம் வாங்குவான். சிவபக்தனென்று கூறிக்கொண்டு சைவர் கோஷ்டியில் யாசகம் வாங்குவான். எப்பொழுதும் பொய் பேசுவான் இப்படி நடக்குங்காலத்தில் ஒரு சிவராத்திரி தினத்தில் சிவாலயத்திற் சிவ ஆவுடையாரை வைத்துக் கொண்டு பூசைசெய்

தான். சிவாலயத்திலிவனை யெல்லாரும் உத்தமபிராமணனென்று நினைத்துத் தங்களாலான திரவியசகாயஞ்செய்தார்கள். அப்பொழுது விசுவேசரென்று பேருள்ள ஒருபிராமணன் அங்கேவந்து அந்தஆவுடையாரழகைப் பார்த்துக், கெங்காதரனிதை விற்றுவிடுவானென்று தெரிந்து ஓ கங்காதரா! என்னுடைய ஆவுடையாரைத்திருடன் கொண்டுபோய்விட்டான்; எனக்கு என்னது வயதாய்விட்டது. ஆவுடையாரில்லாத பூஜை பிரயோஜனமில்லை; இன்றைக்கு சிவராத்திரிபுண்யகாலமாகையா லிந்த ஆவுடையாரை எனக்குத் தானஞ் செய்தால் உனக்கு மஹாபுண்ணியமுண்டு. பணத்தை வாங்கிக் கொண்டு கொடுத்தாலவன் அசுரனாய் விடுவான்- ஆவுடையாரில்லாமற் பூஜைபண்ணிச் சாப்பிடுகிறசாதம் மாம்ஸத்துக்குச் சமானம். குடிக்கிற தீர்த்தம் கள்ளுக்குச் சமானம். அந்த வீடு விருத்தியடையாது. அந்த மனிதனிரண்டு காற்பசுவுக்குச் சமானம்.

ஒருவன் ஆவுடையாரைப் பூஜைசெய்து விட்டால் அவன் பிரேதத்தைப் பிரம விஷ்ணு ருத்ராதியோரும் விரும்புகிறார்கள். கோடிப்பிரமஹத்தி, குருதாரகமனமிவைகள் நசிக்கும். அந்தப் பூசையின் பலன் சிவனுக்குத் தெரியுமேயொழிய மற்றவருக்குத் தெரியாது. ஆகையால் எனக்கொரு ஆவுடையார்கொடு என்று கேட்டான். இந்த வார்த்தைகேட்ட கங்காதரன்கோபங்கொண்டு, நறநறவென்று பல்லைக்கடித்து, அடாபாபி! மோட்சமருளாநின்ற சிவநாபியைக் கேட்கிறாயா? அதைக் கேட்ட நாக்கை அறுக்கவேண்டும். உனக்கு நான் கொடுக்கமாட்டேன். இவர் தானெனக்குப் புத்திர களத்திராதிகளைத் தந்தருளினார். ஆகையால் நான் யாசகங்கொடுக்கமாட்டேன். வேண்டுமானல்பணங்கொடுத்து வாங்கிக்கொள். நான் தரித்திரன் எனக்குப் பாபமேது? பயமேது? புண்ணியமேது? சுகமேது? துக்கமேது? ஞானமேது? பூசையாலொருநாளும் யா

சகம் கொடுக்கமாட்டேன். வேண்டுமானால் பணங்கொடுத்து வாங்கிக்கொள்ளென்றான். அது கேட்ட விசுவேசன் அடா! சிவனை விலைக்குவிற்கிறாயா! அந்தப்பணத்தைக்கொண்டு ஜீவனம்பண்ணுகிறாயா! சிவலிங்கம் புஸ்தகம், கங்காஸ்நானம், சேதுஸ்நானம், சிவதரிசனம், சிவராத்திரிவிருதம், பிரதோஷவிருதம், சோமவாரவிருதம் இவைகளின் பலனைவிற்கிறவன் நாய், பன்றி, கழுதை, குரங்கு, கழுகு, வெள்வாலிந்தஜன்மத்தையடைவான். மஹாநரகத்தை யநுபவிப்பான். சிவனைவிற்கிறேனென்றுவாயாலேசொன்னாலும், அதைக்காதாலே கேட்டாலும், அவன் வௌவாலாய்ப் பிறப்பான். அந்தப் பணத்தைக் கொண்டு ஜீவித்தாலந்த அன்னம் மலத்துக்குச் சமானம். அந்தத் தீர்த்தம் மூத்திரத்துக்குச் சமானம். ஆகையால், அடேபாவீ! நீநாயாய்ப்போ! காக்கை, கழுதை,கோழியிந்த ஜன்மத்தையடை! கடைசியில் காவேரியின் தென்திசையில்

வடேசர் சந்நிதானத்தில் ஆலங்கிளையில் வௌவாலா
ய்த்தொங்கி ஒருவேடனாற் கொல்லப்பட்டு அங்கிருக்
கிற புஷ்கராமதீர்த்தத்தில் விழப்போகிறாய்; அதில்
விழுந்தவுடன் சாபம்போய், உனக்குத்திவ்யசரீரம் வந்
து, தெய்வவிமானத்திமேலேறிச் சிவபதமடையப் போகி
றாய், பின் உனக்குப் பிறப்பில்லை- எந்தவழியிலாவது
நீ சிவனைப் பூசித்து விட்டாய்; அதனாலுனக்கு க்ஷேத்
திரவாசமும் சிவராத்திரிபூஜையும் கிடைத்துவிட்டது.
அதினாலுனக்குத் தீர்த்தஸ்பரிசம் கிடைத்து விட்டது.
சிவராத்திரியிலொருக்ஷணமாவது, அரை க்ஷணமாவது
சிவாலயத்தில் வசித்தால் அவனைத் தேவர்கள் பூஜிப்
பார்கள். மோட்சம் கிடைக்கும்- அவன் சிவனேயா
வான்- என்று கூறக்கேட்டுக் கங்காதரன் தலை வணங்கி
வெளியில் வந்தபோது திருடர்கள் அவனையடித்து க்
கொன்றார்கள். அவனிருபத்தொரு நரகங்களையுமனு
பவித்து, நாய் முதலிய ஈனஜென்மங்களெடுத்துக் க

டைசியில் வௌவாலாய்ப் பிறந்து புத்திரகாமதீர்த்தக் கரை யாலங்கிளையில் தொங்கிக் கொண்டிருக்கையில், ஒரு வேடன் மாமிசத்தைபுத்தேசித்து வேட்டையா டிக்கொண்டு அவ்விடம் வந்து அந்த வௌவாலைப் பார்த்து அடித்ததால் அதுதீர்த்தத்தில் விழுந்திறந்து திவ்ய சரீரமுற்றுச் சிவலோகம் பெற்றது. இந்தத் தீர்த்தமகிமையைப் படித்தாலும், கேட்டாலும், அவர்கள் சிவனே யாவார்கள்.

ஒன்பதாவது அத்தியாயம்,

முற்றிற்று.

---

## பத்தாவது அத்தியாயம்.

—()()—

கேளும் சௌநகரே என்று சூதர் சொல்லுகிறார். முன் காலத்தில், மஹேந்திரன் ஒரு ரிஷி சாபத்

கால் நடிக்கிறனுய்ப் போய், வடாரணியம்வந்து, புத்திகாமதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, பஞ்சாட்சர ஜபம்பண்ணி, உத்தமபிராமணர்களுக்குச் சோடசமஹாதானங்களும் செய்து, குருகடாட்சத்தாலும், தீர்த்தஸ்நான பலத்தாலும் அங்கேசெய்ததான பலத்தாலும், பரமிவானுக்கிரஹத்தாலும் மகைசுவரியத்தை யடைந்தான். சித்தர், சாத்தியர், கருடர், காந்தருவர், யட்சர், கின்னரர், கிம்புருடர், உரகர், அஷ்டவசுக்கள், அப்ஸரஸ்திரீகள், ரிஷிகள், திக்குப்பாலகர் முதலானவர்களோடு பலவாத்தியகோஷங் களோடும், வடாரண்யேசுவரரைப்பணிந்து தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, ஆலவிருட்சத்தை வலமாகச்சுற்றிவந்து, விபூதி ருத்திராக்ஷதாரணஞ் செய்துகொண்டு, சிவநாமகீர்த்தனம் பண்ணிவந்தான். வைசாக சுத்தத்தில்; சித்திரை மாசத்தில் சுக்கிலபட்சத்தில் துவஜாரோகணஞ் செய்து, போதாயன விதிப்படி ஒன்பது நாளும் வாகனம்பல்லக்

ருகளில் ஸ்வாமியை யெழுந்தருளப்பண்ணி, வடை இட்லி முதலிய பட்சணங்களும், பலவகைச் சித்திரான்னங்களும், ததியோதனம், கறி, வ்யஞ்சனங்கள், நாநாவித பழவகைகளும் ஸ்வாமிக்கு நிவேதனஞ்செய்து, பிறகு பிராமணர்களுக்குப் போஜனமும் பண்ணிவைத்தான். ஒன்பதாநாள் இரத்தின கஜிதமான தேரலங்கரித்து, விசித்திரமான கொடிகள்கட்டி, தோம்பை, தோமரங்கள்கட்டி, நந்திநாகங்கள் வைத்து, பலவிதமானசேலைகள் கட்டி, மாலைகள்தொங்கவிட்டு, ஆயிரம் ஸ்தம்பங்கள் நிறுத்தி, நாலுவாசல்வைத்து, பாக்குக்குலை, கரும்பு, வாழைமரம், தென்னங்குலை, பலவகையான பழங்கள்கட்டிச், சக்கரவாகம் முதலிய பட்சிகள் வைத்து சிங்கம், புலி முதலிய வுருவங்களையமைத்து, பதினாயிரம் இரத்தின தீபமேற்றி, மல்லிகை, முல்லை, ஜாதி புஷ்பங்களாலலங்கரித்து, வெண்சாமரை விசிறிகளோடு பெருமானை யிரதத்திலேற்றி, மஹாரிஷிக

ளோடும், தேவகூட்டத்தோடும், வேதகோஷத்தோ டும். இரதோற்சவம் நடத்திப், பிறகு, அபிஷே கம் செய்வித்து, பத்தாநாள் பூர்ணமாவாசையில் ஸ்வாமியை ரிஷபவாகனத் திலாரோகணித்து, புத்திர காமதீர்த்தத்தில் அவப்பிருதஸ்நானஞ் செய்வித்தார் கள். அந்தக் காலத்தில் ஸ்நானம்பண்ணுகிறவர்களுக் குப் பதினாயிரம் கங்காஸ்நானபலன் கிடைக்கும். கோ டி அசுவமேதம், கோடி பௌண்டரீக யாகமிவற்றின்ப லன் கிடைக்கும். இகத்தில் சகல சம்பத்துக்களையு மடைந்து, அந்தத்தில் கைலாசமடைவார்கள். ஸ்நா னமானவுடன் இந்திரன் பிராமணர்களுக்கு போஜனஞ் செய்வித்து, வஸ்திராபரணங்கள் கொடுத்து, மகிழ்ச்சி போடுஉற்சவத்தை நிறைவேற்றினன். பிறகு கோயிற்றிருப் பணி தொடங்கி, பிரகாரங்கள், கோபுரங்கள், மண்ட பங்களெல்லாநிருமித்து, அவ்விடத்தோர் பட்டண மு ண்டாக்கி, நித்தியோற்சவநடக்கும் படிசெய்து, சிவபெ ருமானிடம் விடைபெற்றுக்கொண்டு சுவர்க்கலோகம் போய்ச் சேர்ந்தான்- பிரதிவருஷமும் நடக்கிற பிர

மோற்சவதரிசனத்துக்குத் தேவேந்திரன் இப்பொழு தும் வந்து போய்க் கொண்டிருக்கிறான். வடேசரைப் பூஜிக்கிறவன் சுவர்க்கபதமடைகிறான். உற்சவ நடத்தி வைக்கிறவர்கள் தேவத்துவமடைகிறார்கள். உற்சவதரிசனஞ் செய்கிறவர்கள் சுகவாழ்வு பெறுவார்கள். ஸ்ரீ சைலம் திருவாரூர், கோகரணம், மதுரை, ப்ரம்மேசுவரம், ஜகந்நாதம், சிதம்பரம், கேதாரம், காளாஸ்தி, காஞ்சிபுரம், காசி, மன்னார்குடி, விருத்தகாசி, சாயாவனம், திருவையாறு, பதரிநாவனம், இன்னம்,மற்ற சிவவிஷ்ணுக்ஷேத்திரங்களிலிருந்து அநேக ரிஷிகள் வடாரணியம் வந்து அந்த க்ஷேத்திரமகிமையைப்பார்த்து அங்கேயே குடியாயிருந்து விட்டார்கள். தேவர்களுமிருந்து விட்டார்கள். இந்த ஸ்தலத்துக்கும் தீர்த்தத்துக்கும் ஈடானது பூமியில் வேறொன்றும் கிடையாது. கோவில், குளம், ஆல், இம்மூன்றையும் பிரதக்ஷணம் செய்தால் பூமி பிரதட்சணஞ் செய்த பல

ஹூண்டு சந்தியாகாலத்தில் வடேசுவரனைப் பூஜிக்கிற வன் மோட்சமடைவான். விதிபிகொண்டு ஸ்வாமிக்கு விசிறினால் அவன் சக்கிரவர்த்தியாவான்.

பத்தாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## பதினோராவது அத்தியாயம்

---

தீர்த்த மான்மியங் கூறுகிறேன் கேளுங்களென்று சூதர் சொல்லுகிறார். புத்திரகாமதீர்த்தத்தில் பாதாளகங்கையென்று ஒன்றிருக்கிறது. அதைநினைத்தமாத்திரத்தில் சகலபாபமும் போய்க் கீர்த்தியைக்கொடுக்கும். முற்காலத்தில் கங்கையானவள் சகலமான ஜனங்களும் வந்து என்னிடத்தில் ஸ்நாநம் செய்து தங்கள் பாபத்தினின்றும் விடுபடுகிறார்கள், தானந்தபாபங்

கங்ளால் மூடப்பட்டிருக்கிறேன்; இதற்கென்னசெய்கி றதென்று பிரம்மாவைக்கேட்டாள், சகலதேவர்களோ டுகூடியிருந்த பிரமதேவர் கேட்டுச் சரீரம் புளகித்துச் சொல்லுகிறார். பூமியில் வடாரண்ணிய மென்னொரு க்ஷேத்திர மிருக்கிறது. அதில் ஸ்நானஞ்செய்து சிவ னுக்கு உன் ரூபமான ஜலத்தால் அபிஷேகஞ் செய் உன்னைப் பற்றிய பாபங்களெல்லா நீங்கிப் போகும் என்றார். அதைக் கேட்ட கங்கை உடனே வடாரணி யம்வந்து, புத்திர காப தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, தான் பிரவாகரூபியாய்ச் சிவனுக்கு அபிஷேகஞ் செய் வித்தாள். அது முதல் அந்தத்தீர்த்தத்திற்குப் பாதா ளகங்கை யென்று பெயர் வந்தது. அதில் ஆனிமாஸத் தில் மூலநட்சத்திரத்திலும், கிருஷ்ணபட்சம் சதுர்த் தசி கூடின மங்களவாரத்திலும், சித்திரைமாஸம்வெள் ளிக்கிழமையிலும், கார்த்திகை ஸோமவாரத்திலும் ஸ் நானஞ்செய்தால் சிவபதமடைவார்கள். ஸ்நானகால

த்தில் தீர்த்தராட்சகரையும், சுப்பிரமணியக்கடவுளையும், அதன் தேவதையாகியவடேசரையும், தியானம்பண்ண வேண்டும். தீர்த்தமத்தியிலிருக்கிற பைரவரையும், நமஸ்காரஞ் செய்யவேண்டும். பிறகு ஆலின் கீழ்அன்னம், தயிர், பால், நெய், கம்பளம், தங்கம், இவைகளகப்படாவிட்டால் பசு தானம் செய்யவேண்டும். இந்தத் தீர்த்தத்திற்குத் தெற்கே, வடேசருக்கு ஆக்னேயத்தில் காசியப தீர்த்த மிருக்கிறது- அதில் ஸ்நானம் பண்ணி சிவபிரானை நமஸ்காரஞ் செய்து, துதிசெய்து தவஞ்செய்தபடியால் காசியபர் பிரஜைகளைச் சிருஷ்டிக்க வரம்பெற்றார். அதற்கு விருட்சம் வில்வம்! ரிஷிபிரம்மா! வடேசர் தீர்த்ததேவதை! நந்தி தீர்த்தபாலகர்! ஸ்நாநகாலத்திலிவர்களைஸ்மரிக்கவேண்டும். பிறகு தேன், நெய், யானை, பசு, முத்துஇவைகளைத் தானஞ்செய்யவேண்டும். இதற்குக் கிழக்கேமூன்று விற்கடைக்கப்பால் சமீதீர்த்தமிருக்கிறது. கிரு

ஷ்ணுமூர்த்தியின் கட்டளைப் படி பாண்டவர்கள் வந்து ஸ்நானம்பண்ணிப் பாரத யுத்தத்தில் துரியோதனாதியரை வதம் செய்து ஜெயம் பெற வரம்பெற்றார்கள்- கிருஷ்ணன் ஸ்தாபித்ததாலிதற்குச்சமீதீர்த்தமென்றுபெயர். இதற்கு அதிதேவதை துருஹிணர். ஸ்நானஞ் செய்து நவரத்தினம், காளைமாடு, தாசி, கன்னிகை முதலியதானம்பண்ண வேண்டும்- சமீவிருட்சத்தின் கீழ் ஒரு அணு அளவுதானஞ் செய்தால் அது மேருவத்தனை பலன் கொடுக்கும்- மார்கழிமாசம் சுக்கிலபட்சசப்தமிசேர்ந்த ஞாயிற்றுக்கிழமையில் ஸ்நானஞ்செய்தால் பஞ்சமஹாபாதகங்களும் விலகும்; துர்ப்போஜனபாபம் விலகும்.

சுவாமிக்கு வடபாகத்தில் பாபநாசம் என்று ஒரு தீர்த்தமுண்டு. அந்தத் தீர்த்தத்திற்கு வடநாதர் தேவதை! ரிஷிபார்க்கவர்! தீர்த்தரட்சகர்பிருங்கி! ஸ்ரீ

காலைகாலத்தி லிவர்களைத் தியானஞ் செய்துகொள்ள வேண்டும். நாடோறும் சூரிய உதயகாலத்தில் ஸ்நானஞ்செய்தால் அவன் குலத்தில் மூன்று தலைமுறை பரிசுத்தமாகும். ஞாயிறு, செவ்வாய், வெள்ளியிந்த வாரங்களிலும், சங்கிராந்திகாலங்களிலும், தட்சிணாயண, உத்தராயண புண்ணியகாலங்களிலும் பருவம்,சிவராத்திரிகளிலும் ஸ்நானஞ்செய்தால், சுவர்ணபகரணம், பசுஹத்தி துர்ப்போஜனம், துர்த்தானம் வாங்குதல், புண்ணியவிக்கிரயம் முதலிய பாபங்கள் தொலையும். கன்னிகை, குதிரை, யானை, எண்ணெய், இரும்பு, எருமைநெய், இரத்தினம், திரவியம், விபூதி, ருத்திராட்சம் இவைகள் தானஞ்செய்தால் மனோபீஷ்டம் சித்திக்கும். ஸ்வாமிக்கு மேற்புறத்தில் வடேசுவரரால் சுப்பிரமணியசுவாமிக்குச் சத்திசித்திக்கும்படி நிர்மிக்கப்பட்ட சக்திதீர்த்தமிருக்கின்றது. அதற்குத் தேற்கேயிலிருந்து நிர்ருதராட்சகர் சண்டிகேசுவரர் முதலியன்

அதிதேவதை; ஸ்நானகாலத்திலிவர்களை ஸ்மரிக்கவேண்டும். இதில் ஸ்நானஞ்செய்தால் மஹாபாபங்கள், கலிதோஷங்கிரும். எமனைவிலக்கக்கூடிய எருமை, எள்ளு, பால், பசு, தயிர், பழங்கள் தானஞ்செய்து, பஞ்சாக்ஷரத்தை ஜபிக்கவேண்டும். அதன் கரையில் ஸ்ரீவிருட்சமிருக்கின்றது. அதனடியிலே தான் நாரதமஹாரிஷிதபசு செய்தார். வைசாக சுக்கிலபட்சதிருதியையில் ஸ்நானஞ்செய்தால் செவிடு, குருடு, கால் கை குறைவு, முதலானவைதீரும். குழந்தைகள், பசுக்கள் கீர்த்திபுண்டாகும்.

சிவனுக்கு வாயுதிக்கில் விற்கடை தூரத்தில் ஞானதீர்த்தமிருக்கிறது. அதுவியாசரால் நிருமிக்கப்பட்டதால் அதற்கு வியாசதீர்த்தமென்று பேர். அதற்குத் தேவதைபரமசிவன். அதிதேவதை இந்திரன், இருஷி, பிரம்மா ஸ்நானகாலத்திலிவர்களை ஸ்மரிக்கவேண்டும். அதனருகில் நீபவிருட்சமிருக்கிறது. அதனடியில் ஸாளக்கிராமம், கமண்டலம், தாலி, தாளம்,

படுக்கை, வஸ்திரம், எண்ணெய், நெய், சிவலிங்கருத்திராட்சமாலை இவை அகப்படாவிட்டால் சிவலிங்கதானஞ்செய்தால் ஸர்வதானபலன் கிடைக்கும். ஞானமுண்டாகும். சிவராத்திரி, பஞ்சமி சேர்ந்த செவ்வாய்க்கிழமைகளில் ஸ்நானஞ்செய்தால் சிவனேயாவார்; ரோகங்கள் தீரும், புத்திரபௌத்திராபி விருத்தியும், பசுவிருத்தியுமுண்டாகும்.

இவ்வேழு தீர்த்தங்களையுஞ்சேவித்தால் ஸர்வாபீஷ்டமுண்டாகும். புஷ்கரா தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து ஸ்வாமி சந்நிதானத்தில் மாவிளக்கேற்றினால், கோடிகோதானபலனும், கோடியாகஞ் செய்தபலனுமுண்டாகும் பூபிரதக்ஷண பலனுமுண்டாகும். அந்தத்தில் சிவபதம் சேர்வார்கள். இந்த ஏழு தீர்த்தங்களுமேழுலோகத்தையுங் கொடுக்கும் மகிமையுள்ளன. இதற்கீடான க்ஷேத்திரம் இருந்ததுமில்லை! இருக்கப்போ

கிறதுமில்லை: இந்த க்ஷேத்திரமான்மியத்தை நான் வியாசர்பாற்கேட்டுனர் நாரதர்களுக்குச் சொன்னேன் .

இந்த வாரணவியமான்மியத்தை பொருந்தாங் கேட்டால் ஆயிரம் பௌண்டரீகயாகபலன், நூறு அசுவமேதயாகபலன், ஆயிரம் கோதானம், நூறு அன்னதானம், கங்காசமுத்திர சங்கமத்தில் துர்ப்பிக்ஷகாலத்தில் கோடி பிராமணர்களுக்கந்தானம் இவைகள் செய்த பெரும்பலனுண் டாகும்.

இந்தப் புஸ்தகமெந்த வீட்டிலெழுதி வைக்கப் பட்டிருக்கிறதோ, எவனிந்தப்புஸ்தகமெழுதித் தானஞ் செய்கிறானோ அவன் வீட்டில் மஹாலெட்சுமி சுக்கில பட்சசந்திரன் போலவிளங்குவாள். பக்திஹீனனுக்குப் புஸ்தகதானங்கொடுக்கக்கூடாது. சிவபக்தர் களுக்கே கொடுக்கவேண்டும் என்று சூதபுராணிகர் சௌநகாதி மஹாரிஷிகளுக்குத் திருவாய் மலர்ந்தருளினார்.

இவ்வாறுகச் சூதபுராணிகர் சொன்ன கதையைக்கேட்டுப் பேரானந்தமடைந்த சௌநகாதி முனிசுவரர்கள் ஸ்ரீசூதமுனிந்திரரைப் பலவாறுகத் துதித்துப், பூசித்துப் பணிந்துமகிழ்ந்தார்கள். இந்தக் கதையைப் படிப்போரும் கேட்போரும் சகல சௌபாக்கியசம்பன்னர்களாய்ப் புத்திரபௌத்திர களத்திராதிகளோடு, சிவபெருமான் மலரடிக்கினிய அன்பர்களாய் நீடுழிவாழ்க- வாழ்க. மங்களமுண்டாக.

பதினோராவது அத்தியாயம்.

முற்றிற்று.

வடாரணிய மான்மியம்

முற்றிற்று.

